# ஸ்ரீமத் பகவத் கீதையும்

## ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யர் அருளிச் செய்த பாஷ்யமும்



மொழிபெயர்ப்பு
ப்ரஹ்மநிஷ்டர் ஸ்ரீ த. சுந்தரராஜ சர்மா

வெளியிடுபவர்
ஸ்ரீ ஞானானந்த நிகேதன்
தபோவனம்



# ஸ்ரீமத் பகவத் கீதையும்

## ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யர் அருளிச் செய்த பாஷ்யமும்



*மொழிபெயர்ப்பு*

ப்ரஹ்மநிஷ்டர் ஸ்ரீ த. சுந்தரராஜ சர்மா

*வெளியிடுபவர்*

ஸ்ரீ ஞானானந்த நிகேதன்
தபோவனம் அஞ்சல் – 605 756
விழுப்புரம் மாவட்டம்
தமிழ்நாடு
2013

ॐ

श्रीसद्गुरुभ्यो नमः



श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्याः श्रीज्ञानानन्द गिरि स्वामिनः

मन्दस्मितमुखाम्भोजं महनीयगुणार्णवं
मधुराभाषिणं शान्तं सर्वभूतदयापरम्।
भक्तवात्सल्यजलधिं परमानन्दविग्रहं
ज्ञानानन्दं प्रपन्नोऽस्मि निर्मलज्ञानसिद्धये ॥

# ஸமர்ப்பணம்

(நான்காம் பதிப்பு)

மதுரை ஜில்லா மேல் மங்கலம் ஸ்ரீ த. சுந்தரராஜ சர்மா அவர்கள் ஆதிசங்கரர் அருளிய ஸ்ரீமத்பகவத் கீதா பாஷ்யத்தை வடமொழி அறியாதவர்களும் படித்துணர்ந்து பயன் பெறவேண்டுமென்ற பெருநோக்குடன் நேரிடையான தமிழ்மொழியில் மொழிபெயர்த்து 1905–ல் வெளியிட்டார்கள். "இந்த கீதா சாஸ்திரத்திற்கு பகவத்பாதர் அருளிச்செய்த பாஷ்யத்தையும், கீதாமூலத்தையும், கூட்டாமலும் குறைக்காமலும், உள்ளது உள்ளபடி என் சிற்றறிவிற்கு எட்டிய அளவு மொழி பெயர்த்திருக்கின்றேன். இந்நூற் ஸ்வபாவ ரீதியானது எவ்வளவு இடம் கொடுத்ததோ, அவ்வளவு தெளிவான எளிய தமிழ்நடையில் இம்மொழி பெயர்ப்பை எழுதியிருக்கின்றேன்" என்று சிறந்த வேதாந்த விற்பன்னரான ஸ்ரீ சுந்தரராஜ சர்மா அவர்கள் தமது முகவுரையில் கூறுகிறார். 1908–ல் ஸ்ரீ சிருங்கேரி மஹாஸந்நிதானம் ஜகத்குரு ஸ்ரீ ஸச்சிதானந்த சிவாபிநவ ந்ருசிம்ம பாரதிஸ்வாமிகள் தமது பெரியகுளம் முகாமிற்கு இவரை வருவித்து "சங்கரர் ஹ்ருதயத்தை அப்படியே அனுவாதத்தில் படம்பிடித்த மஹாபாக்கியசாலி" என்று பாராட்டினார்கள்.

கீதாபாஷ்யத்தின் இந்த தமிழ்மொழிபெயர்ப்பின் இரண்டாவது பதிப்பை ஸ்ரீ ஞானானந்த தபோவனத்தைச் சேர்ந்த ஸந்நியாசிகள், சிருங்கேரி ஸ்ரீ சாரதாபீடம் ஜகத்குரு மஹாஸந்நிதானம் ஸ்ரீ அபிநவவித்யா தீர்த்த ஸ்வாமிகளும், காஞ்சி காமகோடி பீடம் ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளும் அருளிய ஸ்ரீமுகங்களுடன் 1977–ல் வெளியிட்டனர். பரமபூஜ்ய ஸ்ரீவித்யானந்தகிரி ஸ்வாமிகளின் "ஸ்ரீமத் பகவத் கீதா பாஷ்யத்தின் தனிச்சிறப்பு" என்ற கட்டுரையும், டாக்டர் ஸ்ரீ டி.எம்.பி. மகாதேவன் அவர்களின் முகவுரையும் இப்பதிப்பில் இடம் பெற்றன.

இந்த தமிழாக்கத்தின் மூன்றாம் பதிப்பு, மூன்று பாகங்களாக, திருமலை திருப்பதி தேவஸ்தானம் வழங்கிய பொருளுதவியுடன், 1983–ல் ஸத்குரு ஸ்வாமி ஸ்ரீ ஞானானந்தகிரி மெமோரியில் டிரஸ்டினால் வெளியிடப்பட்டது.

இந்த நான்காம் பதிப்பு ஸ்ரீ ஞானானந்த நிகேதன் அறக்கட்டளையின் பிரசுரமாக வைகாசி விசாகத் திருநாளன்று வெளிவருகிறது. இந்நூலின் அருமை தெரிந்து இப்பதிப்பிற்கு பொருளுதவி செய்த பக்தர்களுக்கும், இதை அச்சிட்டுத் தந்த சுதர்ஸன் கிராஃபிக்ஸ் நிறுவனரான ஸ்ரீ என். சுப்ரமணியன் மற்றும் எல்லோருக்கும் எங்களது நாராயணஸ்மிருதி.

இவ்வரிய நூலை அனைவரும் படித்துணர்ந்து பிறவிப்பயனைப் பெற்றுய்ய வேண்டும் என்ற பிரார்த்தனையுடன், ஸத்குருநாதரின் பாதாரவிந்தங்களில் ஸமர்ப்பிக்கின்றோம்.

*ஸ்ரீ ஞானானந்த நிகேதன்*
தபோவனம் அஞ்சல் – 605 756
வைகாசி விசாகம், பூர்ணிமா
விஜயஸ்ரீ வைகாசி மீ' 10ம் தேதி
வெள்ளிக் கிழமை
24.05.2013

*ஓம் நித்யானந்தகிரி ஸ்வாமிகள்*

# முகவுரை

(முதற் பதிப்பு)



''ஓம் நமோ பகவதே வாஸுதேவாய.'' ஸ்ரீமத் பகவத்கீதா சாஸ்திரமானது ஸகல வேதார்த்தஸாரமென்றும், பொருளுணர்தற்கு அரியதென்றும், வேதரஹஸ்யமென்றும், ஆன்றோரனைவராலும் ஏத்திப் போற்றப் படுகின்றதென்பது உலகெலாம் அறிந்த உண்மை. ஆகவே, ருக்வேதம், ஸாமவேதம் என்றாற்போல கீதாவேதமெனக் கூறலாகும். அப்படியே, ஒவ்வொரு அத்தியாயத்தின் இறுதியிலும் ''பீஷ்ம பர்வத்திலே, ஸ்ரீமத் பகவத் கீதைகளாக, உபநிஷத்துக்களாக,[1] ப்ரஹ்மவித்யையாக, யோகசாஸ்திரமாகவிருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணார்ஜுன ஸம்வாதத்திலே'' என இந்நூலினுட் கூறப்பட்டிருக்கின்றது. அன்றியும், இதற்கு இயைய இந்நூல் தனக்குள் அமையப்பெற்ற மஹாபாரதத்தை ஐந்தாம் வேதமென்றலும், ''ஸகல வேதார்த்தமும் பாரதத்திலிருக் கின்றது; பாரதார்த்தம் முழுவதும் கீதையிலிருக்கின்றது; ஆதலின், இது ஸகல சாஸ்திரமும் நிறைந்ததாக உயர்த்தி மதிக்கப்படுகின்றது[2]'' என்று மஹாபாரத உரையாசிரியர் நீலகண்டர் பகவத்கீதை உரையின் தொடக்கத்தில் கூறியிருத்தலும், கீதாபாராயண ஆரம்பத்தில் ''எல்லா உபநிஷத்துக்களும் பசுக்களாக, கோபாலனென்னும் குழந்தை பால் கறப்பவனாக, அர்ஜுனன் பாலூட்டும் கன்றாக, நல்லறிவுடையோர் பால் குடிப்பவராக, கீதை – சாகாமையைத் தருகின்ற சிறந்த அமிருதமான பாலாகி நின்றது[3]'' எனத் தியானித்தலும் காண்க.

---

[1] இந்நூல் யாவரும் மேலாகக் கொண்டு பூஜிக்கத்தக்க மேம்பாட்டையுடையதாயிருத்தல் பற்றி, இவ்வுயர்வுப்பன்மை இரண்டும் இங்கு வழங்கலாயின.

[2] भारते सर्ववेदार्थाः भारतार्थश्च कृत्स्नशः ।
गीतायामस्ति तेनेयं सर्वशास्त्रमयी मता ॥

[3] सर्वोपनिषदो गावः दोग्धा गोपालनन्दनः ।
पार्थो वत्सः सुधीर्भोक्ता दुग्धं गीतामृतं महत् ॥

மேலும், கீதா சாஸ்திரமானது வ்யாஸ மகர்ஷிகளால் செய்யப் பட்டது எனக் கூறாது, "மகாபாரதத்தில் வெளியிடப்பட்டது[4]" என்று கூடார்த்த தீபிகையின் இறுதியிலும், "புருஷோத்தமனுடைய திருவாக்காய், கீதை என்னும் பெயருடையதாய், வேத வாக்கியங்களின் ரஹஸ்யமாய் எது உள்ளதோ ..........[5]" என்று 18–ஆம் அத்தியாயத்து 66–ஆம் சுலோகத்தின் உரையிலும் மதுஸூதன ஸரஸ்வதியாரும், "கிருஷ்ணத்வைபாயனர், பகவான் உபதேசித்த அதே பொருளை எழுநூறு சுலோகங்களால் சேர்த்தமைத்தனர். அவற்றுள், பெரும் பான்மையாக ஸ்ரீகிருஷ்ண (பகவான்) முகத்தினின்று வெளிவந்த சுலோகங்களையே எழுதலாயினர். அவற்றின் (முன் பின் உள்ள கதாஸந்தர்ப்பத்) தொடர்ச்சிக்காக, தாம் சில சுலோகங்களைச் செய்து சேர்த்தனர். (இதனை) "பத்மநாபனுடைய முகாரவிந்தத்தினின்றும் ஸ்வயமாகவே வெளிவந்த கீதைகளையே நன்றாகப் படிக்க வேண்டும். மற்றைய சாஸ்திர விஸ்தாரங்களால் என்ன?" எனக் கீதா மாஹாத்மியத்தில் கூறப்பட்டிருக்குமாறு (காண்க)[6]" என்று கீதையின் உரைப்பாயிரத்தில் ஸ்ரீதரஸ்வாமிகளும், "என்னுடைய உயர்ந்த வித்யையானது ப்ரஹ்மஸ்வரூபமாகிய கீதைதான்; ஸம்சயமில்லை... (அது), அறிவும் ஆனந்தமுமான கிருஷ்ணன் அர்ஜுனனுக்குத் தன் வாயினால் அருளிச் செய்தது; (ருக், யஜுஸ், ஸாமமென்னும்) மூன்று வேதமாய்ப் பரமானந்தமாகி நிற்பது..[7]" என்று வராஹபுராணமும் கூறுகிறபடி, பரம் பொருளின் உண்மையை உணர்த்தும் பகவானுடைய திருவாக்குக்குக் கீதை என்று பெயர்.

இது "முற்றுணர்ந்தவரான வேதவ்யாஸ பகவான் கீதை என்னும் பெயருடைய எழுநூறு சுலோகங்களால் அந்த தர்மத்தை பகவான்

---

4 "......महाभारते.....विख्यातम् "

5 " वचो यद्गीताख्यं परमपुरुषस्याऽगमगिरां रहस्यम् ...."

6 तमेव भगवदुपदिष्टं अर्थं कृष्णद्वैपायनः सप्तभिः श्लोकशतैः उपनिबबन्ध।
तत्र च प्रायशः श्रीकृष्णमुखनिस्सृतानेव श्लोकान् अलिखत। कांश्चित् तत्संगतये स्वयं व्यरचयत्।
यथोक्तं गीता माहात्म्ये
"गीताः सुगीताः कर्तव्याः किमन्यैः शास्त्रविस्तरैः।
याः स्वयं पद्मनाभस्य मुखपद्माद्विनिस्सृता॥" इति

7 गीता मे परमा विद्या ब्रह्मरूपा न संशयः ...... चिदानन्देन कृष्णेन प्रोक्ता स्वमुखतोऽर्जुनम्।
वेदत्रयी परानन्दा ...... ॥

உபதேசித்த வண்ணம் திரட்டி அமைத்தார்[8]'' என்று பாஷ்யகாரர் அருளிச் செய்த திருவாக்கினுடைய ஒவ்வொரு பதத்தின் நோக்கத்தையும் சேர்த்துப் பார்த்து ஊகித்தறிவார்க்கு இனிது புலப்படும். ஆகவே ப்ரஹ்மாவினிடமிருந்து வெளிப்பட்ட ருக், யஜுஸ் ஸாமாதி வேதங்களைப் பாதராயண பகவான் (வ்யாஸர்) ஒழுங்காகத் திரட்டி அமைத்தது போல, பகவானிடமிருந்து வெளிப்பட்ட கீதா வேதத்தையும் அப்படியே அமைத்தாரெண்க.

ஆகவே, இப்படிப்பட்ட இவ்வேதத்தின் மெய்ப்பொருளைக் கண்டு, உணர்ந்து, உலகத்திற்கு உரைக்கத்தக்க உரிமையுடையார் பகவதவதாரமான மகான்களேயாவர். அத்தகையார் அருளிச் செய்த உரையானது, இந்நூற்பொருளை ஸம்சய விபரீதமற உணர்தற்கு எவ்வாற்றானும் இன்றியமையாதது. ஏனெனில், அவ்வாறான உரையின்றிப் படித்தால், பொருளை அறியவே முடியாது. ஒருகால் முடியுமாயினும், அது புருஷார்த்தம் கைகூடா வண்ணம் கெடுத்து அநர்த்தமும் விளைவிக்கும். எங்ஙனமெனில், "கடலின் ஜலத்தைத் தனது உள்ளங்கையால் விலக்கி, அதனுள் புதைந்து கிடக்கும் ரத்னங்களை ஒரு நல்ல தெப்பத்தின் உதவியன்றி எடுக்க முயல்பவன் சுழல்களில் அகப்பட்டு மூழ்கிவிடுவானன்றோ."

இது இங்ஙனம் நிற்க. பிற நாடுகளிற்போல நம் தமிழ் நாட்டிலும் பகவத் கீதா சாஸ்திரமானது ஸர்வஜன ஸாதாரணமாய் பெரிதும் வழங்குகின்றது. இவ்வாறு வழங்குகின்ற அரிதுணர் பொருள்தான் இவ்வேத ஸாரத்திற்குக் கீழ்க் கூறியவாறு உரிய ஆசார்யர் எவராயினுமாகுக; அவர் அருளிச் செய்த உரையின் ஒரு மொழி பெயர்ப்பாயினும் நம் தமிழ்ப் பாஷையில் கறந்த பால் கறந்த வண்ணம் அவர் சொன்னவாறே அமைந்து வெளிவந்ததாகத் தெரியவில்லை.

ஆதலால், இச்சாஸ்திரத்திற்கு பகவத்பாதர் அருளிச் செய்த பாஷ்யத்தையும் கீதா மூலத்தையும், கூட்டாமலும் குறைக்காமலும் உள்ளது உள்ளபடி என் சிற்றறிவிற்கு எட்டிய அளவு மொழி பெயர்த்திருக்கின்றேன். இந்நூற் பொருளின் ஸ்வபாவ ரீதியானது எவ்வளவு இடங்கொடுத்ததோ, அவ்வளவு தெளிவான எளிய தமிழ்

---

[8] I-ம் பக்கத்தில் 2–5 வரிகளைப் பார்க்க

நடையில் இம்மொழிப் பெயர்ப்பை எழுதியிருக்கின்றேன். மற்றும், முதனூற் கூறும் விஷயங்களுக்குத் தலைக்குறிப்புகளும், எளிதில் பொருள் விளங்காத இடங்களில் குறிப்புகளும் தந்திருக்கின்றேன். (முதனூல் – கீதையும், பாஷ்யமும்)

''ஒரு பாஷையினின்று மற்றொரு பாஷைக்கு ஒன்றை மொழி பெயர்த்துக் கொண்டு போகும்போது, முதனூலிலுள்ள செறிவும் பொலிவும் அழகும் நயமும் மொழி பெயர்ப்பாகிய வழிநூலிற் குறைவுபடுதல், உலகத்திற் பெரும்பான்மை.'' மேலும், ஸ்ரீமத் பகவத்கீதையை அர்த்த ஞானமின்றிப் பாடமாத்திரமாகப் பாரயணஞ் செய்தலும் புண்ணியமாகும்; (18–70). அவ்வாறே, புண்ணியமாகும் பாஷ்யபாராயணமும். ஆகவே முதனூலையே நேரே படித்துணர்தலும் அர்த்த ஞானத்தோடு பாராயணஞ் செய்தலும் மிக விசேஷமாதலால், கீதையும் பாஷ்யமும் இம்மொழி பெயர்ப்போடு ஒருங்கே பதிப்பிக்கலாயின.

ப்ரஹ்மஸ்ரீ ஏ. மகாதேவ சாஸ்திரியார், பி.ஏ., அவர்கள் ஆங்கில பாஷையில் மொழி பெயர்த்துள்ள கீதையை உபயோகித்ததற்கு அன்புடன் அநுமதித்த பெருந்தகமைக்கு மனமுவந்து வந்தனஞ் செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன்.

இனி, என் போன்றவர் செய்யும் இத்தகைய மொழி பெயர்ப்பிலும் முதனூற் பதிப்பிலும் குற்றங் குறைகள் வந்திருத்தல் கூடும். ஆதலின், எவராயினும் அவற்றை எடுத்து எனக்குத் தெரிவிப்பராயின், அப்பேருதவி செய்த அவரிடம் மகிழ்வோடு நன்றி பாராட்டச் சித்தனாயிருக்கின்றேன்.

*''ஸ்ரீ கிருஷ்ணார்ப்பண மஸ்து.'' ''ஓம் தத் ஸத்''*

சென்னை                                                  *த. சுந்தராஜசர்மா*

டிசம்பர் மீ", 1905

# முகவுரை

(இரண்டாம் பதிப்பு)

ஆதி சங்கரர் அருளிய மூன்று பாஷ்ய க்ரந்தங்களுள் ஒன்று ஸ்ரீமத் பகவத் கீதாபாஷ்யம். இவ்வரிய நூலையும், ஐத்ரேய உபநிஷத், ஸனத் ஸுஜாதீயம் இவற்றிற்கான ஸ்ரீ சங்கரரின் பாஷ்யங்களையும், அவர் அருளிய ஸ்ரீதக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரத்தை ''மானஸோல்லாஸம்'' என்ற விளக்கவுரையுடனும், வடமொழி அறியாதவர்களும் படித்துணர்ந்து பயன்பெற வேண்டுமென்ற பெருநோக்குடன் நேரிடையான தமிழில் மொழிபெயர்த்துப் பிரசுரித்து 1904–10ல் வெளியிட்டவர் மதுரை ஜில்லா மேல்மங்கலம் ஸ்ரீ.த. சுந்தரராஜ சர்மா, பேரறிஞர்கள் பலரது பாராட்டுதல்களைப் பெற்ற இவர் சிறுவயதிலேயே ஸ்வானுபவம் அடைந்தவர். நுட்பமான கருத்துக்களையும் தக்க மேற்கோளுடன் தெளிவுபட உணர்த்தும் இவரது மொழி பெயர்ப்பு இனிய எளிய நடையில் நயம்பட உணர்த்தும் திறன் கொண்டதாகும். ''பகவத் கீதையும் சங்கரபாஷ்யமும்'' என்ற இவரது மொழிபெயர்ப்பு நூல் வெளிவந்தபின், 1908ல் ஸ்ரீ சிருங்கேரி மஹாஸந்நிதானம் ஜகத்குரு ஸ்ரீசச்சிதானந்த சிவாபினவ ந்ருசிம்மபாரதி ஸ்வாமிகள் தமது பெரியகுளம் முகாமில் இவரை வருவித்து ''சங்கரர் ஹிருதயத்தை அப்படியே அனுவாதத்தில் படம் பிடித்த மஹா பாக்கியசாலி'' என்று பாராட்டினார்கள்.

ஸ்ரீ சிருங்கேரி குரு பரம்பரையில் ஸ்ரீ சாரதாபீடத்தை முதன் முதலாக அலங்கரித்த ஸ்ரீஸுரேச்வராசாரியர் இயற்றிய க்ரந்தமான மானஸோல்லாஸ வார்த்திகத்தின் இவரது தமிழ் மொழி பெயர்ப்பின் இரண்டாவது பதிப்பு 1965ல் சென்னை கவர்னர் மேதகு மகாராஜா ஸ்ரீ ஜெய சாமராஜா உடையார் அவர்கள் தலைமையில் டாக்டர் சி.பி.ராமஸ்வாமி ஐயர் அவர்களால் வெளியிடப்பட்டது. இந்தப் பதிப்பிற்கு அருளிய ஸ்ரீமுகங்களில் சிருங்கேரி, காஞ்சி பீடாதிபதிகள் ஸ்ரீ சுந்தரராஜ சர்மாவின் அனுபவ நிலையை மெச்சிப் பாராட்டியுள்ளார்கள்.

ஸ்ரீ சங்கர பகவத்பாதர் நிறுவிய உத்தர ஆம்னாய ஜோதிர் மடத்தின் பீடாதிபதி ஸ்ரீ சிவரத்னகிரி ஸ்வாமிகளின் சீடரும், பிரம்ம

ஞானியும், முதுபெரும் ஞானஸித்தரும், தமிழ்நாட்டில் திருக்கோவிலூரையடுத்த தபோவனத்தில் தங்கி அருள்பாலித்து வந்து 1974ல் பரிபூர்ணத்வமெய்தியவருமான ஸ்ரீ ஞானானந்தகிரி ஸ்வாமிகளின் சிஷ்யர்களான சந்நியாசிகளின் முயற்சியால் கீதாபாஷ்யத்தின் ஸ்ரீ சுந்தரராஜ சர்மா அவர்களின் தமிழ் மொழி பெயர்ப்பின் இரண்டாம் பதிப்பு இப்பொழுது வெளியிடப்பட்டுள்ளது. மேலும், ஸ்ரீமத் பகவத் கீதை ஜோதிர் ஆம்னாயத்தின் க்ரந்தமாகவும் உள்ளது. முதற்பதிப்பில் உள்ள கீதாபாஷ்யத்தின் வடமொழி மூலம் இப்பொழுது எங்கும் எளிதில் கிடைப்பதாலும், வெளியீட்டு செலவு அதிகரிப்பு கருதியும் இப்பதிப்பில் அச்சிடப்படவில்லை. முதற்பதிப்பில் உரைப்பாயிரத்திலும் 2, 3 அத்தியாயங்களிலும் பிரசுரிக்கப்பட்ட ஆசிரியரின் அருஞ் சொற்களுக்குரிய விளக்கங்கள் ''குறிப்புகள்'' என்ற தலைப்பின் கீழ் ஒன்றாய்த் தொகுக்கப்பட்டு இப்பதிப்பின் இறுதியில் வெளியிடப்பட்டுள்ளன.

1933—ல் பிரம்மஸ்ரீ டி. அருணாசல சாஸ்திரிகளால் இயற்றப்பட்டு வெளியிடப்பட்ட ''ஸ்ரீமத் பகவத்கீதா தாத்பர்ய நிர்ணயம்'' என்ற நூலின் இரண்டாம் பதிப்பும் ஸ்ரீ ஞானானந்த தபோவனத்துத் துறவிகளால் 1973—ல் பிரசுரிக்கபட்டு ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதாரவிந்தங்களில் சமர்ப்பிக்கப்பட்டது. இந்நூல் கீதாபாஷ்யத்தின் ஸாராம்சத்தை உள்ளது உள்ளபடி புரிந்துகொள்ள மிகவும் அனுகூலமாயிருக்கும்.

கீதாபாஷ்யத்தின் தமிழ் மொழிபெயர்ப்பின் இந்த இரண்டாம் பதிப்பை வெளியிட அனுமதியும், முழு உரிமையும் தந்த பெரியகுளம் காலஞ்சென்ற ஸ்ரீ C.Y. நாகேச்வரய்யர் குமாரர் ஸ்ரீ யக்ஞ நாராயணய்யருக்கும் இந்நூலின் அருமை தெரிந்து பொருள் உதவி புரிந்த பக்தர்களுக்கும், இவ்விரண்டாம் பதிப்பிற்கு மனமுவந்து முன்னுரை அளித்த டாக்டர் ஸ்ரீ. T.M.P. மகாதேவன் அவர்களுக்கும் எங்கள் நாராயண ஸ்மிருதி.

இப்பதிப்பிற்கு ஸ்ரீமுகம் கொடுத்து ஆசி நல்கிய ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீ சாராதாபீடம் ஜகத்குரு ஸ்ரீ மகாஸந்நிதானம் அபிநவ வித்யா தீர்த்த ஸ்வாமிகள், ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் பாதார விந்தங்களில் எங்கள் ஹ்ருதயாரவிந்தங்களை

ஸமர்ப்பித்து எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். சிறந்த இவ்வரிய நூலை அனைவரும் படித்துணர்ந்து பிறவிப்பயன் பெற வேண்டுமென்று பிரார்த்தனையுடன் இந்நூலை ஸத்குரு ஸ்ரீ ஞானானந்தகிரி ஸ்வாமிகள் பாதாரவிந்தங்களில் அஞ்சலியுடன் ஸமர்ப்பிக்கிறோம்.

நளஹு தை மீ கிருத்திகை
29.01.1977

*ஸந்நியாசிகள்*
ஸ்ரீ ஞானானந்த தபோவனம்

# ஸ்ரீமத் பகவத் கீதா பாஷ்யத்தின் தனிச்சிறப்பு

''அறிவு அறியாமையினால் மூடப்பட்டுள்ளது. அதனால் பிராணிகள் மயங்குகின்றன.'' (ப.கீ. V-15) அவித்யை என்பது செய்கை. செய்பொருள்கள், பயன் என்னும் பேதபுத்தியான வேற்றுமையுணர்வு. (அது) ஆத்மாவினிடத்து எப்பொழுதும் தங்கியுள்ளது. ''செய்கை என்னுடையது; இப்பயனுக்காக இச்செய்கையைச் செய்யப் போகிறேன்'' என்ற இந்த அவித்யையானது அனாதி காலமாக தலைப்பட்டிருப்பது. 'அகர்த்தாவாய், கர்மமில்லாதவனாய், பயனில்லாதவனாய், தனிப் பொருளாய் இதோ நான் இருக்கிறேன், என்னைக் காட்டிலும் வேறொருவன் இல்லை, என இத்தகையதாக உண்டாகும் ஆத்மஞானம், கர்மத்திற் செல்லுவதற்குக் காரணமான பேத உணர்ச்சியைப் போக்குகின்றதால், அவித்யையைத் துடைக்கிறது.' (ப.கீ. XVIII-66) என்கிறார் பாஷ்யகாரர்.

''ஆனால் எவர்களுடைய அந்த அஜ்ஞானமானது ஆத்மாவைப் பற்றிய ஞானத்தால் நசிக்கப்பட்டதோ அவர்களுக்கு ஞானம் சூரியன் போல, அப்பரம் பொருளை விளங்கும்படி செய்கின்றது.'' (ப.கீ. V-16) இந்த பகவத் வசனத்திலிருந்து பந்தம் அஜ்ஞானத்தால் வந்ததால், மேலான நன்மையாகிய மோக்ஷம் அல்லது விடுதலை ஆத்ம ஞானத்தினால் தான் ஏற்படும் என்று விளங்குகிறது.

பகவான் கீதையில் ஜகத்தை தன்னிடமிருந்து அந்யமாய் சொல்லவில்லை. தானே ஜகத்திற்குக் காரணமென்றும், உலகம் முழுவதும் தானேயாயிருப்பதாகவும், தன்னை விட்டு எதுவுமில்லை யென்றும் சொன்னதோடு, தான் இந்த ஜகத்துக்கு அந்யமாய், த்ருச்ய தர்ம ரஹிதமான நிர்குண க்ஷேத்ரஜ்ஞனாயிருக்கிறதாகவும் சொல்லியிருக்கிறார். நிர்குண க்ஷேத்ரஜ்ஞ ஸ்வரூபமும், குணமய ஜகத்ரூபமும் பரஸ்பர விருத்தமாயிருப்பதால், ஒரு ரூபம் ஸத்யமாயும், மற்றொரு ரூபம் தோற்ற மாத்திரமாயும், அதாவது மித்யையாயும் தான் இருக்க வேண்டும். ஒரு வஸ்துவின் தோற்ற ரூபத்தை க்ரஹித்தவன் அஜ்ஞனென்றும், யதார்த்த ரூபத்தை க்ரஹித்தவன்

அறிந்தவனென்றும் உலகத்தில் சொல்வார்கள். பகவான், தன்னுடைய குணமய ஜகத் ரூபத்தைக் கண்டு மோஹித்து, அதில் விருப்பு வெறுப்புள்ள பிராணிகள் அஜ்ஞர்களென்றும், நிர்குண க்ஷேத்ரஜ்ஞ ரூபத்தைக் கண்டவர்கள் ஞானிகள் என்றும் சொல்லியிருப்பதால், க்ஷேத்ரஜ்ஞனான பரமாத்மாவொன்றே உண்மையென்றும் குணமயமான ஜகத் மித்யை அல்லது தோற்றம் மாத்திரமேயென்றும் ஸித்திக்கின்றது. ''ஸர்வ க்ஷேத்ரங்களிலுமுள்ள க்ஷேத்ரஜ்ஞனை நான் என்று அறிந்து கொள்.'' (ப.கீ. XIII-2) அதே பதின்மூன்றாம் அத்தியாயத்தில் 22ம் சுலோகத்தில் ''இந்த உடம்பினுள் (உள்ள)'' என்றும் ''பரமாத்மா'', ''மேலான புருஷன்'' முதலிய விசேஷணங்களால் க்ஷேத்ரஜ்ஞனே உத்தம புருஷன், அவனே பரமாத்மாவென்றும் தெரிகிறது. ஜகத் மித்யை அல்லது தோற்றமாத்திரமேயென்றும், அத்தோற்றத்திற்கு அதிஷ்டானமாக, அதாவது அடிப்படையாக இருக்கும் ஸத்ரூபியான பரமாத்மா க்ஷேத்ரஜ்ஞனான நானேயென்று நிச்சயிப்பது தான் ஞானம். இவ்விதமாகிய ஆத்ம விஷயமான அறிவு அறியாமையைப் போக்கடித்து தானும் அழிந்துவிடுகிறது. ஸ்வரூபம் ஸ்வதஸ்ஸித்தமாய் இருப்பதால் மிஞ்சுகிறது.

## ச்ரவணம், மனனம், நிதித்யாஸனம்:

மேலே கூறப்பட்ட பிரஹ்மாத்ம தத்வம் உபநிஷத்துக்களில் செம்மையாக விளக்கப்பட்டிருக்கிறது. அதை சாஸ்திரங்களிலிருந்தும், குருவினிடமிருந்தும் அவற்றில் பூர்ண நம்பிக்கையோடு கேட்டு அறிவது ச்ரவணம் எனப்படும். பிறகு ச்ருதியால் அனுமதிக்கப் பட்டதும், ஆத்ம அனுபவத்திற்கு ஒத்ததாகவும், அதனுடன் ஒன்றுபட்டதாகவும் இருக்கும் தர்க்கத்தைக் கொண்டு, அந்த தத்வத்தை அடிக்கடி மனதில் தென்படும்படி பரிசீலனை செய்வதை மனனம் என்பார்கள். ச்ருதிகளின் நானாத் தன்மையால் பிரமாணத்தில் (சாஸ்திரத்தில்) எழும் சம்சயங்களும் அகண்ட ஏக ரஸ அத்விதீய ப்ரஹ்ம வடிவ மஹாவாக்யத்தின் அர்த்தத்தின் அலௌகிகத் தன்மையால் அது அஸம்பாவிதம் என்று ப்ரமேயத்தில் ஏற்படும் சந்தேகங்களும் ச்ரவண மனனங்களால் நிவிர்த்தியாய் விட்டாலும்,

அந்த ஞானம் பரோக்ஷம்தான். வெகு ஜன்மங்களின் திடாப்பியாசத்தினால் க்ஷணத்திற்கு க்ஷணம் மீண்டும் மீண்டும் தேகாதிகளில் ஆத்ம புத்தியும், க்ர்த்ருத்வம் முதலியவற்றின் அபிமானமும் இவ்வாறு ஜகத்தினது ஸத்தியத் தன்மையின் புத்தியுமாகிய விபரீதபாவனை வந்து கொண்டிருக்கிறது. உபநிஷத் ஜன்யமான ஞானமும் அனாதிகாலமாய் இருந்து வரும் இந்த அஜ்ஞானம் உள்ள அளவிற்கு அனுபவ ஆருடமானால் தான் அந்த விபர்யயங்களை நீக்கவும், ''பல்வேறு ஜீவன்களில் நான் ஒருவன்'', ''ஜீவன் வேறு, ஈச்வரன் வேறு'' ''ஜகத் ஸத்யம்'' என்ற விதமான அஜ்ஞானத்தை அழிக்கவும் வல்லதாகும். ச்ரவண மனனங்களால் ஏற்பட்ட பரோக்ஷ ஞானத்தை நிச்சய வடிவமான புத்தியைக் கருவியாகக் கொண்டு 'அவகதி' எனப்படும் அனுபவத்தில் போய் முடியும் வரை செய்யப்படும் ப்ரயத்னமே நிதித்யாஸனம் எனப்படும். உபநிஷத்துக்களிலிருந்து கிடைக்கும் தத்வம் நம்முடைய அனுபவத்துடன் ஒன்றுபடுவதற்கு ஏற்ற உபாயமாக நிதித்யாஸனம் அமைந்திருப்பதால், அதுவே ச்ரவண மனனங்களையும் விட அதிக மதிப்புள்ளதாகிறது. அதனால் தான் அது 'விஜ்ஞானம்' என்ற சொல்லால் ப்ருஹதாரண்ய உபநிஷத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. (ப்ரு–உப.II- 4.5)

ப்ருஹதாரண்ய உபநிஷத்தில் யாக்ஞ்யவல்க்யர் மைத்ரேயிக்கு அருளிய உபதேசத்தின் விளக்கவுரையிலும் ப்ரஹ்ம சூத்ர பாஷ்யத்தில் ஜிக்ஞாஸாதிகரணத்தின் பாஷ்யத்திலும் நிதித்யாஸனத்தைப் பற்றி பாஷ்யகாரர் மேற்சொன்னவாறு குறிப்பிட்டிருந்தாலும், கீதா பாஷ்யத்தில்தான் பதினெட்டாம் அத்தியாயத்தின் 50வது ச்லோகத்தில் ''எது ஞானத்தின் முடிந்த எல்லையோ'' (நிஷ்டையோ) என்று பகவான் கூறுமிடத்து, 'ஞானநிஷ்டை' என்பதை விவரிப்பதிலும், 55வது ச்லோகத்தின் வியாக்கியானத்தில் ஞானநிஷ்டையே பராபக்தி என்று சொல்லுமிடத்திலும், நிதித்யாஸனத்தின் ஸ்வரூபத்தை விஸ்தாரமாகவும், தெளிவாகவும் முமுக்ஷுக்களுக்கு மிகவும் உபயோகமாகும் முறையிலும் விசாரித்திருக்கிறார். சாதாரணமாக, ஓர் பொருளை அறியும்பொழுது அந்த அறிவு அப்பொருளினது உருவத்தைக் கொள்கிறது. ஆனால், ஆத்மாவோ அறியப்படும் பொருளாகாது; மேலும், அது உருவமற்றது. அத்தகைய

ஆத்மாவினுடைய வடிவ ஞானமானது நிகழக் கூடுமா? இதற்கு பதில் அளிக்கையில் பாஷ்யகாரர் ஆத்மா மிக நிர்மலமாயும், மிக ஸ்வச்சமாயும், மிக நுண்மையாயுமிருத்தாலால், புத்தியும் அவ்வாறு ஆத்மாவைப் போல நிர்மலமாகவும், ஸ்வச்சமாகவும் நுண்மையாகவும் இருக்கக்கூடுமென்பதினால், அத்தகைய புத்தி ஆத்மாவினுடைய ஞான வடிவத்தின் சாயலைக் கொள்ளுதல் அமையும் என்பதை தெளிவாக விளக்குகிறார். (ப.கீ. XVIII- 50)

''ஆத்மாவை அறியச் செய்ய வேண்டியதென்ன?'' ''பெயர், உருவம் முதலிய அனாத்மாக்களை, ஆத்மா அல்லாதவற்றைத் தள்ளுதலே தான் செய்ய வேண்டியது; ஆத்ம சைதன்ய உணர்ச்சியைச் செய்ய வேண்டாம். ஏனெனில் அவ்வுணர்ச்சி அவித்யையினால் ஏற்றப்பட்ட எல்லாப் பொருள்களினுடைய உருவங்களோடு கூடவே சேர்ந்து (அவற்றை அறியும்பொழுது) உணரப்படுகின்றது.'' (ப.கீ. XVIII- 50) என்கிறார் ஆசார்யாள்.

ஆகவே ''வெளித் தோற்றங்களுடைய பேத புத்தியைத் தவிர்த்தலே ஆத்ம வடிவத்தைப் பற்றுதற்குக் காரணமாம். ஆத்மா என்பது ஒருவனுக்கும் ஒரு பொழுதாயினும் தெரியாத பொருளன்று; அடையவேண்டிய பொருளன்று; தள்ளவேண்டிய பொருளன்று; அல்லது கொள்ள வேண்டிய பொருளன்று'' (ப.கீ. XVIII-50). ஒருவனுக்கு தனது உடம்பை அளந்தறிய வேறு பிரமாணம் வேண்டுமா? அதுபோலவே, ஆத்மா உடம்பினும் உள்ளே உள்ளமையால், அதாவது உடம்பைக் காட்டிலும் மிகச் சமீபத்திலிருப்பதினால், அதனை அறியும் விஷயத்தில் வேறு பிரமாணம் தேவையில்லை.

''ப்ரஹமம் மிகப் பிரஸித்தமாயுள்ளது; ஆகையால், அதை உணர்வதிலே முயற்சி செய்ய வேண்டாம். அதனிடத்து அவித்யையினால் ஏற்பட்டவற்றை தள்ளுதல் மாத்திரம்தான் செய்ய வேண்டும்'' என்று வலியுறுத்துகிறார் பாஷ்யகாரர். (ப.கீ. XVIII- 50)

ஆத்மா இவ்வளவு பிரஸித்தமாயிருந்தால் ஏன் ஆத்ம ஞானம் இவ்வளவு அரிதாயிருப்பது போல் தோன்றுகிறது? இதற்கு அன்புடன் விடையளிக்கிறார். ''ஆத்மா (யாவர்க்கும்) நன்கு தெரிந்திருப்பது,

எளிதில் அறியக்கூடியது; மிகச் சமீபத்திலுள்ளது. ஏனெனில் ஒருவனுக்கு 'தான்' என்பது எதுவோ, அதுவாயிருக்கிறது. ஆயினும், பகுத்தறிவு இல்லாத அவிவேகிகளின் புத்தி அவித்யையினாற் கற்பிக்கப்பட்ட பெயர், உருவம் என்பவற்றினுடைய பல தோற்றங்களால் கவரப்பட்டுள்ளதால், அப்புத்திக்கு அந்த ஆத்மா தெரியாததாகவும் அறிவிற்கு அரியதாகவும், வெகு தூரத்திலிருப்ப தாகவும், வேறு பொருள் போலவும் தோன்றுகிறது. ஆனால், ஆசார்யனது அருளையும், மனத்தினது தெளிவையும் பெற்று வெளித்தோற்றங்களின்றும் புத்தி நீங்கியவர்க்கு, எளிதில் அறியக் கூடியதாயும், மிகச் சமீபத்திலுள்ளதாயும் இருப்பது வேறொன்று மில்லை'' என்று ஆணித்தரமாச் சொல்கிறார். (ப.கீ. XVIII - 50)

சித்தசுத்தியும், ஸாதனாசதுஷ்டயமும், ச்ரவண மனனங்களால் ஸம்ஸ்கரிக்கப்பட்ட புத்தியுடையோர்க்குத் தான் ஞான நிஷ்டை நிகழும் என்பதை ஸ்பஷ்டமாகக் கூறுகிறார் ஆசார்யாள். ''குரு ஸம்பிரதாயமில்லாதவராய், வேதாந்த நூல்களை படித்துணராதவராய், வெளி விஷயங்களில் புத்தி முழுதும் அழுந்தியவராய், நேரான (ச்ருதி) பிரமாணங்களில் பயிற்சி செய்யாதவர்க்கு ஞான நிஷ்டையானது அமையாது. மற்று அவர்கட்டு மாறானவர்க்கு குரு ஸம்பிரதாயத்தையும் மற்றும் இது போன்றவற்றையுமுடையவர் ஆத்ம அறிவைத் தவிர வேறோர் பொருளைக் காண மாட்டார்; ஆகவே, உணரப்படுவதும் உணர்வதுமாகிய உலகப்பொருளிலே, த்வைதப் பொருளிலே அவர்களுடைய புத்தி சிறிதும் அமையாது. (த்வைதம் மெய்யென்னும் எண்ணம் அவர்க்கு உதிக்காது)'' (ப.கீ. XVIII-50) என்று ப்ரௌடமாகப் பேசுகிறார் பாஷ்யகாரர். அதாவது ஞான நிஷ்டையினால் விபர்யயங்கள் யாவும் நீங்கும் என்பது பொருள். அந்த விக்ஷேபங்கள் நீங்கிய மெய்ஞான நிலையையே பகவானும் ''எது பிராணிகட்கெல்லாம் இரவோ, அதில் அடக்கமுள்ளவன் விழித்திருக்கிறான். எதில் பிராணிகள் விழித்திருக்கின்றனவோ அது (உண்மையைக்) காணும் முனிவனுக்கு இரவு'' (ப.கீ. II 69) என்னும் ச்லோகத்தில் குறிப்பிட்டுள்ளார்.

ஒரு பொருளைப் பற்றிய அறிவு, எழும் பொழுதிலேயே, அப்பொருள் விளங்க அங்ஙனமே அறிபவன் அதனையறிந்து

விடுகிறான். எனவே இங்கு ஞானத்தின் ஆவிர்த்தியாகிய ஞான நிஷ்டை, அதாவது பயிற்சியினால் அறிவு அடுத்தடுத்து வருவதாகிய ஞானநிலை ஏன் வேண்டும்? இந்த சங்கையைத் தீர்க்கிறார் ஆசார்யாள். ''சாஸ்திரம், ஆசார்யன் இவர்களது உபதேசத்தினால் ஆத்மாவைப் பற்றிய ஞானம் பிறப்பதற்கும், அது முதிர்ந்து பழுப்பதற்குக் கராணமாயும் அந்த உபதேசத்திற்கு துணையாயுமுள்ளவையுமான புத்தியின் தெளிவு (ப.கீ. XVIII 51–53) முதலியவற்றையும், 'அமானித்வம' (பணிவு) (ப.கீ. XIII 7–11) முதலியவற்றையும் நாடி, அவ்வுபதேசத்தால் பிறந்த க்ஷேத்ரக்ஞனும் பராமாத்மாவும் ஒன்று என்னும் ஞானமானது, கர்த்தா முதலான செய்பொருள்களைப் பற்றிய பேத புத்தியினால் அமைகின்ற எல்லாக் கர்மங்களையும் துறந்திடுதலோடு (ஸர்வ கர்ம ஸன்யாஸத்துடன்) கூடி தன் ஆத்ம அனுபவ நிச்சய வடிவாய் நிற்றல் எதுவோ, அதுவே மேலான **ஞான நிஷ்டை** எனக் கூறப்படுகின்றது'' (ப.கீ. XVIII-55) ''ஈச்வரன் வேறு, க்ஷேத்ரஜ்ஞன் வேறு'' என்னும், அனாதி காலமாய் வெகு ஜன்மங்களின் அப்பியாசத்தினால் அனுபவத்தில் ஏறிய எண்ணம் முற்றும் ஒழிவதற்கே இந்த ஞானத்தின் ஆவிர்த்தியாகிய ஞான நிஷ்டை அவசியமாகிறது.

அறிவு வடிவமான ஆத்மா மற்ற பொருள்களையறியும் அறிவிற்கு அடிப்படையாயுள்ளது; இந்த உதயாஸ்தமன ரஹித ஆத்ம சைதன்யத்தினால் ஒளிரப்பட்டே புத்தி பொருள்களையறிகிறது. ஆகவே அந்த ஆத்மாவை அறியப் புகுதலென்பது பொருந்தாது. அது ஸ்வதஸ் ஸித்தாயுள்ளது; ஸ்வயம் பிரகாசமாய் விளங்குகிறது; ஒவ்வொரு பொருளின் அறிவின் மூலமும் யாவர்க்கும் தெரிந்துள்ளது. குடம் போன்ற ஒரு பொருளை அறிவினால் எட்ட முயலுவதுபோல எல்லாவிதமான அறிவிற்கும் மூலமான இந்த ஆத்மாவை வேறொரு அறிவினால் அறிய முயற்சிப்பது தவறு. ஏனெனில் அது முடிவில்லாமற் போய்விடும். ஆத்ம ஞானத்திற்கு உருவமில்லை; அது பிரத்யக்ஷமாயில்லை எனச் சொல்வோரும் கூட அந்த ஆத்ம சைதன்யத்தின் வழியாகத் தான் எல்லாப் பொருள்களையும் அறிகிறார்கள், என்கிறார் ஆசார்யாள். (ப.கீ. XVIII - 50).

ஆகவே கார்யகாரண ரஹிதமான புருஷோத்தமனை எவ்விதம் தெரிந்து கொள்வது என்றால், தெரிந்து கொள்ள வேண்டியதில்லை. தெரிந்து கொள்ள வேண்டிய பிரயத்னத்தை அபேக்ஷிக்காமல் மற்றொன்றையறியும் பிரயத்னத்தை நிறுத்தின மாத்திரத்தில் தனக்குத்தானே விளங்கும் நித்ய ஸித்தமான க்ஷேத்ரஜ்ஞனான பரமாத்மா, அவனே புருஷோத்தமன்.

அனாத்ம பிரத்யய திரஸ்கரணமான ஞான நிஷ்டையை எப்படிச் செய்வது? ''மனத்தை ஆத்மாவினிடத்து நிற்பதாகச் செய்து ஒன்றையும் நினைக்கக்கூடாது'' (ப.கீ. VI - 25) என்ற பகவத் வசனத்தை விளக்கும் வகையில் சொல்கிறார். ''தைர்யத்தையுடைய புத்தியினால் ஸகலமும் ஆத்மாதான். அதைக் காட்டிலும் வேறொன்றுமில்லை, என இவ்வாறாக மனத்தை ஆத்மாவினிடத்து நிலைத்ததாகச் செய்து, (அவன்) ஒன்றையும் நினைக்கக்கூடாது'' இதை ஈசாவாஸ்யோபநிஷத்தின் முதல் மந்திரத்தின் பாஷ்யத்திலும் கூறுகிறார். ''அந்த சொந்த ரூபமான ஈசனாகிற ஆத்மாவினால், அதாவது, ப்ரத்யகாத்மாவாக இருப்பதால் நானே இவை யாவும் என்பதாய் பரமார்த்த ஸத்ய ரூபத்தினால், அந்ருதமான (அழியக் கூடியது) அசையுமசையாப் பொருள் ரூபமான இவையாவும் மறைக்க (போக்க)த் தக்கதாகவாகிறது.'' சந்தகனாகரு த்ருஷ்டாந்தத்தைச் சொல்லி, ''அவ்விதமே சொந்தமான ப்ரத்யகாத்மாவினிடத்தில் அத்யசிக்கப்பட்டதும் ஸ்வாபாவிகமும் (வெகு) ஜன்ம பழக்கத்தாலேற்பட்டதும் கர்த்ருத்வ போக்த்ருத்வ ரூபமானதுமான பூமியிலுள்ள த்வைத ரூபமான ஜகத்தானது, பரமார்த்த ஸத்யமான ஆத்ம பாவனையால் விடப்பட்டதாகவாகிறது'' இவ்விதம் ஆத்மவித்துக்கு புத்திராதிகளாகிய ஏஷணாத்ரயத்தின் ஸன்னியாஸத்தினால் ஆத்ம ஞான நிஷ்டை ஏற்படுதல் வாயிலாக ஆத்மா ரக்ஷிக்கத்தக்கது என்றும் தெரிகிறது.

ஆசார்யாளின் ஸூத்ர பாஷ்யத்தில் ஸமன்வயாதிகரணத்திலும் ''அழிவற்ற புருஷார்த்தத்தை (சுகத்தை) விரும்பும் அந்த புருஷனை ஊழ்வினை காரணமாயுண்டான தேஹேந்திரிய ஸங்காத (கூட்ட)த்தின் பிரவிர்த்திக்கு விஷயமான அனாத்ம பதார்த்தங்களினின்றும் திருப்பிவிட்டு ப்ரத்யகாத்ம ஞானதாரையிலேயே ஈடுபட்டிருக்கும்படி

செய்தலையே ''ஏ மைத்ரேயீ! ஆத்மாவேதான காணத்தக்கது.'' (ப்ரு. உப VI 5–6) முதலிய வாக்கியங்கள் முக்கிய நோக்கமாகக் கொண்டன'' என்றும் ''இது என்றும் எல்லாம் என்றும் எது சொல்லப்படுகிறதோ, அது இந்த ஆத்ம ஸ்வரூபமே (ப்ரு.உப. IV 5–7)'' (அதாவது ஆத்மஸ்வரூபத்தை விட இவை யாவும் உண்மையில்லாததே என்பதாம்) என்றும், ''அந்தர்முகப்பட்ட ஆத்மானுபவத்தில் பிரவிர்த்தித்த இவனுக்கு எந்த நிலையில் எல்லாம் ஆத்மாகவேயாகுமோ, அந்நிலையில், எந்த ஸாதனத்தைக் கொண்டு எந்த ஸாத்தியத்தைக் காண்பான்! அறிவான்? எல்லாவற்றையும் அறிவிக்கும் விக்ஞான விருத்திக்கும் பிரகாசனான ஆத்மாவை எந்த ஸாதனத்தால் ஒருவன் அறியக் கூடும்?'' (ப்ரு.உப IV 5–15) என்றும், ''இந்த ப்ரத்யகாத்மாவே ப்ரஹ்மம்'' (மா.உப. 2) என்ற வாக்கியங்களால், தள்ளத்தக்கதுமல்லாததும், கொள்ளத்தக்கதுமல்லாததுமான (அதாவது நித்யமாகவும், ஸ்வதஸ்ஸித்தமாகவுமுள்ளதான) ஆத்மதத்வம் போதிக்கப்படுகிறது என்பதால், கீதாபாஷ்யத்தில் மேற்சொன்னவாறுள்ள ஞானநிஷ்டையின் லக்ஷணங்களே வலியுறுத்தப்பட்டுள்ளன.

ப்ருஹதாரண்யக உபநிஷத் பாஷ்யத்தில் 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்ற மஹா வாக்கியத்தைக் கூறுமிடத்து, ''ஆத்மானமேவாவேத் என்பதை விளக்கும் பொழுதும் ஆசார்யாள் மீண்டும் இதையே குறிப்பிடுகிறார். ''ஆகையால் அஜ்ஞானத்தினால் ஏற்பட்டவற்றைத் தள்ளுவதே 'ஆத்மாவை அறிந்தது' என்று சொல்லப்பட்டது. ஆத்மாவை விஷயீகரிப்பது அல்ல'' (ப்ரு.உப I 4–10).

சுருங்கச் சொல்ல, இதரத்தை நாடாமல் தன்னைவிடாதிருத்தலே ஞான நிஷ்டையின் ஸ்வரூபமாகும். ''த்ருச்யம் இல்லை என்கிற ஞானத்தினால் மனதில் த்ருச்யத்தின் அழிவு ஏற்படுமாகில், அதனால் மேலான நிர்வாண சுகம் உற்பத்தியாகிறது'' என்ற வாசிஷ்ட வாக்கியத்தினால் ''இதரத்தை நாடாதிருத்தல்'' என்கிற வைராக்கியமும், ''ஆத்மாதான் சத்தியம் என்ற ஞானத்தினால் மனதில் எப்பொழுது எண்ணங்கள் எழாமல் இருக்கின்றனவோ, அப்பொழுது வெளியே க்ரஹிப்பதற்கு ஒன்றுமில்லாமல், அந்த மனம் க்ரஹிக்கும் தன்மையற்று, மனமல்லாததாக ஆகிறது'' (மா.கா. III-32) என்ற கௌடபாத மாண்டுக்ய காரிகையினால் தன்னை

விடாமலிருத்தலுமாகிற அப்யாஸமும் குறிப்பிடப்படுகின்றன இந்த ஞானநிஷ்டையின் பலன் கேவலீபாவம்.

ஆகவே ச்ரவண மனனங்களால் சந்தேகம் நீங்கிய ப்ரஹ்மாத்ம ஐக்கியமாகிய அர்த்தத்தில் ஸ்தாபிக்கப்பட்ட சித்தத்தின் ஒருமை அதாவது அந்த ஐக்கிய வடிவமாகிய விருத்தியின் பிரவாகமுடைமையாகிய நிதித்யாஸனத்தின் ஸ்வரூபத்தின் விளக்கம் ஆசார்யாளின் கீதாபாஷ்யத்தின் தனிச்சிறப்பு. ஆசார்யாளின் உபதேசங்களில் முமுக்ஷுக்களின் சாதனைக்கு மிகவும் பிரயோஜனமாயிருக்கும் இது உத்கிருஷ்டமானதாகும்.

முடிக்க: இருப்பது உண்மை அல்ல; இருப்பே உண்மை.
அறிவது உண்மை அல்ல; அறிவே உண்மை.
அனுபவிப்பது உண்மை அல்ல; அனுபவமே உண்மை.

*ஓம் தத் ஸத்*

*சங்கர பகவத்பாதாரவிந்த அவலம்பீ*
*வித்யானந்தகிரி*

# முன்னுரை

(இரண்டாம் பதிப்பு)

ஆதி சங்கரர், தம் கீதாபாஷ்யத்தில் பகவத்கீதையை ஸகல வேதார்த்த ஸாரத்தின் திரட்டு, பொருளுணர்தற்கு அரியது என்று புகழ்கின்றார். மேலும், தமக்கு முன்னால் எழுதப்பட்ட உரைகளில், முன்னுக்குப்பின் முரணாக விளக்கப்பட்டுள்ளதால், கீதையின் பொருளைத் தெளிவாய் நிர்ணயிக்கும் பொருட்டு, தாம் உரையெழுதியிருப்பதாகக் கூறுகிறார்.

கீதாசார்யன் கீதையின் இரண்டாம் அத்யாயத்திலேயே உண்மையான தத்துவம் எது என்பதையும், அதை அடையும் மார்க்கத்தையும் விளக்கியபின், அந்த உன்னத நிலையை அடைந்த மனிதர்களின் குணங்களையும் விவரித்துள்ளார். சாங்கிய யோகம் அல்லது ஞான யோகம் என்பதின் சாரமாக, ஆத்மா அழிவற்றது, விகாரமற்றது, எங்கும் நிறைந்தது, பிறப்பும் இறப்பும் அற்றது என்று விவரிக்கின்றார். சங்கரர் ப்ரம்மம் இவ்விதம் விவரிக்கப்பெறுமாகில் அது 'இரண்டற்றது' என்றும் விளக்கம் கூறுகிறார். ''வேதங்கள் முக்குணங்களை (ஸத்வம், ராஜசம், தாமசம்) விஷயமாகக் கொண்டுள்ளன. நீ முக்குணங்களற்றவனாக ஆவாயாக'' என்று அர்ச்சுனனை விளிக்கின்றார். இவ்வாறாக, கர்மத்தில் பற்றற்றவனாக பலனை பகவானுக்கு அர்ப்பணித்து, ''பலன் கைகூடினும் அல்லது கூடாவிட்டாலும் சமமாக இருப்பதே கர்மயோகம் என்று கூறுகிறார். இவ்வாறு சமத்வ புத்தியை அடைவதால் ஒருவன் நல்வினை தீவினைகளினின்றும் விடுதலையடைய முடியும். இதுதான் 'ஸ்திதப்ரக்ஞன்' என்பவனின் நிலையாகும். இந்த ஜீவன்முக்தன் ஆசைகளைத் துறந்தவன், ஆத்மாவிடத்தே சந்தோஷமாயிருப்பவன், பற்றற்றவன் என்று பலவகையாக விவரிக்கின்றார். இவ்வாறு இரண்டாவது அத்தியாயத்திலேயே முக்தியின் தன்மை, அதை அடையும் மார்க்கம் இவை வெகு சூக்ஷ்மமாகக் கூறப்பட்டுள்ளன.

இரண்டற்ற ஆத்மாவில் நிலைத்திருப்பதே முக்தி. ஒருவனுடைய கடமையை பலன் கருதாது, பலனை கடவுளிடம் அர்ப்பணித்துச் செய்து வருவதால் அவனுடைய மனம் தூய்மை அடைந்து, தெளிவு பெற்று ஞான யோகத்திற்கு உரியவனாகிறான். பின்னர் ஞான யோகத்தினால் தன் உண்மையை உணர்வதால், முக்தி நிலையை அடைகிறான்.

உண்மை தத்துவமும், அதன் மார்க்கமும் அறிவது மிகக் கடினமாதலால் பகவான் மூன்றாவது முதல் பதினேழு அத்யாயம் வரை அவற்றை வெவ்வேறு வகைகளில் விளக்குகிறார். நடுநடுவே அர்ச்சுனன் கேட்கும் கேள்விகட்கும் அவர் பதிலளிக்க வேண்டியிருக்கிறது. பதினெட்டாவது அத்யாயத்தில் சங்கரர் விளக்கியிருப்பதுபோல் கீதையின் சாரத்தை திரும்பவும் அளிக்கிறார். அப்படியிருந்தும் நாம் கடவுளின் உண்மையை அறியாவிடில் இது ப்ரம்மத்தின் தன்மையை அறிவதின் கடினத்தையோ அல்லது நம்முடைய அறியாமையின் கொடுமையையோ குறிப்பதாகும். நிற்க

*கர்மண்யகர்ம ய: பச்யேதகர்மணி ச கர்மய: ।*
*ஸ புத்திமான் மனுஷ்யேஷு: ஸ யுக்தஸ் க்ருத்ஸனகர்மக்ருத் ॥*
*(ப.கீ. IV 18)*

இப்பாடலுக்கு சங்கராசார்யார் ஒருவரே உண்மையான விளக்கத்தைக் கூறியுள்ளார். எவன் 'கர்மத்தில் அகர்மத்தைக் காண்கிறானோ, அகர்மத்தில் கர்மத்தை காண்கிறானோ' அவனே ஞானி என்று பகவான் கூறுகிறார். அகர்மமான ஆத்மாவினிடத்தில் கர்மம் தோன்றுகிறது. மேலும் 'சும்மாயிருத்தல்' என்ற கர்மத்தில் விபரீதமாக 'அகர்மம்' தோன்றுகிறது. இவ்வுண்மையை அறிவதனால் தான் ஒருவன் விடுதலைப் பெறுகிறான். நித்திய கர்மம் பலன் கொடுக்காததால், அதைச் செய்வதை 'அகர்மம்' என்றும், அவற்றைச் செய்யாதது 'கர்மம்' என்றும் விளக்கம் கூறுவது தவறு என்று சங்கரர் வெகு அழகாக விளக்குகிறார்.

"ஆருருக்ஷோர்முனேர்யோகம் கர்ம காரணம்" என்ற (ப.கீ. VI .3) பாடலில் சங்கரர் கர்மத்தின் பயனாக யோக நிலையடைவதையும், அந் நிலையடைந்தபின் கர்மத்தைத் துறந்து ஞானநிலையடைவதையும் மிக அழகாக விவரித்துள்ளார். இவ்வாறு கர்ம யோகத்தால் பக்தி கர்மத்துடன் கூடியுள்ளது. கர்மயோகத்தின் முடிவாக பக்தி யோகத்தில் ஒருவன் பகவானையே தியானிக்கிறான். பக்தி யோகத்திலேயே நான்கு வகை பக்தியை விவரிக்கிறார் கண்ணன். துயரத்தை நீக்க, உண்மையை அறிய, பொருள் பெற, பக்தி கடவுளிடம் செலுத்தப்படுகிறது. ஆனால் ஞானியோ எங்கும் நிறைந்த கடவுளின் உண்மையை அறிந்ததால் கடவுளின் ஆத்மாவாகிறான். அல்லது கடவுள் அவனுடைய ஆத்மாவாகிறார், இங்கு சங்கரர் ப்ரம்மத்தின் இரண்டற்ற தன்மையை விவரித்து ஜீவ—ஈச்வர ஐக்கியத்தைத் தெளிவாக்குகிறார்.

க்ஷேத்ர—க்ஷேத்ரக்ஞ விபாக யோகத்திலோ மிகத் தெளிவாக பகவான், "எல்லா சரீரங்களிலும் உள்ள க்ஷேத்ரக்ஞன் நான்" என்று கூறுகிறார். இந்த க்ஷேத்ரக்ஞனான ஆத்மா, சம்சாரத்தினால் துக்கப்படுபவனல்ல. ஆத்மா, பந்தம், மோக்ஷம் இவற்றிற்கு அப்பாற்பட்டது.

பதினெட்டாவது அத்யாயமாகிய மோக்ஷஸந்யாஸ யோகத்தில், தியாகத்திற்கும், ஸந்யாஸத்திற்கும் விளக்கம் தரும்போது கர்மத்தைத் துறப்பதை ஆதரிக்கிறார் சங்கரர். ஆத்மா அகர்த்தா என்பது இவ்வாறு தெளிவாகின்றது. கர்மத்தினால் பகவானைத் தொழுதல் அவசியம். ஆனால் முக்திக்கு கர்மத்தைத் துறப்பது அவசியம் என்பதே சங்கரரின் கொள்கை. ஞானம் கர்மத்துடன் ஒன்று படாது, கர்மத்தினால் மோக்ஷம் அடைவது என்பது தவறு. நித்திய கர்மம் மறு பிறப்பையளிக்கக் கூடியது என்று பலவாறு விளக்குகிறார். கர்மநெறி, ஞான நெறி இருதிறத்தார்க்கு உரியவை. ஒருவனே ஒரே நேரத்தில் இரு முறைகளையும் அனுஸரிக்க முடியாது. கர்மம் அவித்யையினால் விளைகிறது. ஆனால் ஞான யோகியோ அவித்யையை நீக்கியவன்.

(ப.கீ. XVIII. 66) சங்கரர் அவித்யையின் குணங்களை ஆராய்ந்துள்ள முறை மிக வியக்கத்தக்கது. ஸம்ஸாரத்தின் காரணம் அவித்தை அவித்தையைப் போக்க வல்லது ஞானம் ஒன்றே என்று முடிவாக விளக்கியுள்ளார் சங்கரர்.

கீதையை கர்மயோக சாஸ்திரம், பக்தியோக சாஸ்திரம் அல்லது ஞானயோக சாஸ்திரம் என்று கூறுவது தவறு என்பது சங்கரரின் பாஷ்யத்தைப் படிப்பதால் மிக எளிதில் புரியும். கர்ம யோகமும், சாங்க்ய யோகமும் ஒன்றே என்கிறார். இது இரண்டும் சேர்ந்ததே ப்ரவ்ருத்தி மார்க்கத்தினின்றும் வேறுபட்ட நிவ்ருத்தி மார்க்கமாகும். குருவின் சமீபத்திற்கு உலகத்தை வெறுத்தவனே செல்கிறான். அப்படிப்பட்டவன் ஆசையற்றவனாய் கர்மயோகத்தின் மூலமாக உள்ளத் தூய்மையை அடைகிறான். பக்தியோகத்தின் மூலமாயும் ஒரே நிலையிலுள்ள மனநிலையை அடைகிறான். இந்நிலையில், ஞான யோகத்தில் கூறியுள்ளபடி ஜீவ—ஈச்வர ஐக்கியத்தை உணர்ந்தறிவதால் அவித்யையினின்றும் விடுபட்டு முக்தியடைகிறான். இவ்வாறு நம்பிக்கையுடன் கூடிய பக்தியே ஒருவனை ஞான நிலையை அடையச் செய்யும்.

ஆத்மாவின் 'அனன்யமற்ற' தன்மை, அவித்யையின் உண்மை, சம்சாரத்தின் உண்மையற்ற நிலை, கடவுளின் எங்கும் நிறைந்த தன்மை இவற்றின் விளக்கமே கீதை. சங்கரர் கூறியவாறு அத்வைத வேதாந்தத்தையே போதிப்பது தெளிவாக்குகிறது. ஆகையால், கீதை கர்மத்திற்கு ஸாதகமல்லாது மோக்ஷத்திற்கே ஸாதகமான சாஸ்திரமாகும்.

சங்கரர் வடமொழியில் எழுதிய கீதா பாஷ்யத்தின் இத்தமிழாக்கம், சிறந்த வேதாந்த விற்பன்னரான பெரியகுளம் சுந்தரராஜ சர்மா அவர்களால் எழுதப்பட்டது. இதுவே இத்தகைய முதல் நூல். ஸ்ரீ சர்மா அவர்கள் எளிய தெள்ளிய தமிழ் நடையில் எழுதியுள்ளார். இது ஸ்ரீ ஞானானந்த தபோவனத்தினால் சிறந்த முறையில் வெளியிடப்

பட்டுள்ளது. எல்லா ''யக்ஞங்களிலும் சிறந்த இந்த ஞான–யக்ஞம்'' சிறப்புற ஸ்ரீ கண்ணபிரான் அருள்புரிவாக.

சென்னை

18.12.1976

*டி.எம்.பி. மஹாதேவன்*

ॐ

# ॥ श्री शृङ्गेरी जगद्गुरुसंस्थानम् ॥

श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्य पदवाक्यप्रमाणपारावारपारीण यमनियमासनप्राणायामप्रत्याहार-धारणाध्यानसमाध्यष्टाङ्गयोगानुष्ठाननिष्ठ तपश्चक्रवर्त्यनाद्यविच्छिन्न श्रीशङ्कराचार्य गुरुपरम्पराप्राप्त-षड्दर्शनस्थापनाचार्य व्याख्यानसिंहासनाधीश्वर सकलनिगमागमसारहृदय-सांख्यत्रयप्रतिपादक-वैदिकमार्गप्रवर्तकसर्वतन्त्रस्वतन्त्रादिराजधानी-विद्यानगरमहाराजधानी-कर्णाटकसिंहासनप्रतिष्ठापनाचार्य श्रीमद्राजाधिराजगुरुभूमण्डलाचार्य ऋष्यशृङ्गपुरवराधीश्वर तुङ्गभद्रातीरवासि श्रीमद्विद्याशङ्करपादपद्माराधक श्रीजगद्गुरु श्रीचन्द्रशेखरभारतीस्वामिगुरु-करकमलसञ्जात श्रीजगद्गुरु शृङ्गेरी श्रीमदभिनवविद्यातीर्थस्वामिभिः॥ समस्त आस्तिक महाजनविषये नारायणस्मरणपूर्वकं विरचिता आशिषस्समुल्लसन्तु।

इह लोके संसारपङ्कनिमग्नान् लोकान् समुद्दिधीर्षुः भगवान् नारायणः प्रपन्नायार्जुनाय सर्वोपनिषत्सारभूतं तत्त्वं उपदिदेश। तच्च भगवान् बादरायणः भगवद्गीतेति नाम्ना सप्तभिः श्लोकशतैः उपनिबबन्ध। गभीरार्थायाः भगवद्गीतायाः शङ्करावतारभूताः श्रीमच्छङ्करभगवत्पादाचार्याः भाष्यं व्यतानिषुः। परन्तु भाष्यमिदं न समेषां सुलभावगाहमास्ते। श्रीसुन्दरराजनामानः श्रोत्रियाः समधिगतवेदान्ततत्त्वाः द्रविडभाषया भाष्यमिदमनूद्य लोकानां महान्तमुपकारमकार्षुः। सानुवादोऽयं ग्रन्थः पूर्वं कदाचिन्मुद्रितोऽपि द्वितीयवारं अधुना मुद्राप्यत इतीदमेव ग्रन्थस्यास्योपादेयतां व्यनक्ति। प्रकाशकानामयं प्रयत्नः फलेग्रहिर्भूयादिति वयमाशास्महे॥

कल्याणनगर चबेङ्गलूरुफ

नलकार्तिक कृष्णप्रतिपत् भानुवासरः

७-११-१९७६

इति नारायणस्मरणम्



अज्ञानान्तर्गहनपतितान् आत्मविद्योपदेशैः
त्रातुं लोकान् भवदवशिखातापपापच्यमानान् ।
मुक्त्वा मौनं वटविटपिनो मूलतो निष्पतन्ती
शम्भोर्मूर्तिश्चरति भुवने शंकराचार्यरूपा ॥

ஓம்

# ஸ்ரீ சிருங்கேரீ ஸம்ஸ்தானம்

## ஸ்ரீ முகம்

ஸ்ரீ ஜகத்குரு சிருங்கேரீ ஸ்ரீமத் அபிநவ வித்யாதீர்த்த ஸ்வாமிகளால் எல்லா ஆஸ்திக மஹாஜனங்களுக்கும் நாராயணஸ்மரண பூர்வகமாக ஆசிர்வாதங்கள் ஏற்படட்டும்.

இவ்வுலகில் ஸம்ஸாரமென்னும் சேற்றில் அமுங்கிக் கிடக்கும் ஜனங்களை உத்தாரணம் செய்ய நோக்கம் கொண்ட பகவான் நாராயணர் தன்னை சரணடைந்த அர்ஜுனனுக்கு ஸகல உபநிஷத்துகள் ஸாரமான தத்வத்தை உபதேசித்தார். அந்த தத்வத்தை பகவான் பாதராயணர் பகவத்கீதை என்ற பெயரால் 700 சுலோகங்களாக தொகுத்தார். ஆழ்ந்த கருத்தைக் கொண்ட பகவத் கீதைக்கு சங்கரரின் அவதாரமாயுள்ள ஸ்ரீ சங்கர பகவத் பாதாசார்யாள் பாஷ்யம் (வியாக்யானம்) செய்துள்ளார்கள். ஆனால் இந்த வியாக்யானம் யாவரும் சுலபமாக (எளிதில்) அறிந்து கொள்ளும் நிலையில் இல்லை.

ஸ்ரீசுந்தரராஜர் என்ற பெயர் கொண்ட உத்தம பிராமணர் வேதாந்த தத்வத்தை நன்கு மனதில் அறிந்து கொண்டு தமிழ் பாஷையில் பாஷ்யத்தை மொழி பெயர்த்து உலகிற்குப் பெருத்த உபகாரத்தை செய்தார்கள். ஏற்கனவேயே தமிழ் அர்த்தத்தோடு இந்த புஸ்தகம் அச்சிடப்பட்டிருந்தும் தற்சமயம் 2வது தடவையாக அச்சிடப்படுகிறது என்பதே இந்த கிரந்தத்திற்கு பல பேர்களுடைய அபேக்ஷையை தெரிவிக்கிறது. இதை அச்சிட்டு வெளிப்படுத்துகிறவர்களுடைய முயற்சி ஸபலமாக ஆகவேண்டும் என்று நாம் அருளாசி கூறுகின்றோம்.

*நாராயண ஸ்மரணம்*

கல்யாண நகரம் (பெங்களூர்)
நள—கார்த்திக மீ" கிருஷ்ணபக்ஷ
பிரதமை ஞாயிற்றுக்கிழமை
7–11–1976

॥ श्रीः ॥

श्रीमत्परमहंस परिव्राजकाचार्यवर्य श्रीमच्छङ्कर भगवत्पादप्रतिष्ठित श्रीकाञ्ची कामकोटि पीठाधिपति जगद्गुरु श्रीमच्चन्द्रशेखरेन्द्र सरस्वती श्रीपादादेशानुसारेण श्रीमज्जयेन्द्रसरस्वती श्रीपादैः क्रियते नारायणस्मृतिः ।

"शिष्यस्तेऽहं शाधि मां त्वां प्रपन्नम्" इति अनन्यशरणतया गुरुं प्रपन्नाय अर्जुनाय भगवता श्रीकृष्णेनोपदिष्टा क्रमेणाध्यायषट्कत्रयेण शोधितजीवेश्वर-तदैक्यप्रतिपादिका अत एवोपनिषदिति व्यवह्रियमाणा च श्रीभगवद्गीता परशिवावतार श्रीशङ्करभगवत्पादानुगृहीत भाष्ययुता विराजते।

अस्याः श्रीमद्गीतायाः सभाष्यायाः अथ द्राविडी (तमिऴ्) भाषाज्ञाननिकटे प्रचारयितुं बद्धश्रद्धेन मेऌमङ्गलग्रामाभिजनेन श्रीसुन्दरराजेन विख्यातेन गार्हस्थ्ये स्थितवताऽपि उत्तमसंन्यासि-मनोभावभरितेन पुरुषेण द्राविडीभाषायां प्रणीतोऽनुवादः विशदया शैल्या तत्तद्विषयान् प्रतिपादयन् द्राविडीभाषाज्ञानां गीतार्थजिज्ञासूनां महते उपकाराय प्रभवति।

षष्टिवर्षेभ्यः पूर्वं दाक्षिणात्यग्रन्थलिप्यां मुद्रापितस्य तल्लिपिज्ञेषु प्रसिद्धस्यास्य ग्रन्थस्याधुना दुर्लभत्वं अधिकप्रचारसौलभ्यं च विचिन्त्य अनुवादकमहापुरुषस्य अनेके शिष्याः देवनागरीलिप्यां श्रीभगवद्गीताश्लोकान् शाङ्करभाष्यद्राविडयनुवादं च मुद्राप्य प्रकाशयन्तीति विदित्वा भृशं मोदामहे।

द्राविडीभाषाज्ञाः आस्तिकाः उत्तमस्यास्य ग्रन्थस्य साहाय्येन श्रीभगवद्गीतातथ्यार्थं विजानन्तः

" एतान्यपि तु कर्माणि सङ्गं त्यक्त्वा फलानि च।
कर्तव्यानीति मे पार्थ निश्चितं मतमुत्तमम् ॥ "

इति गीतोपदेशमनुसृत्य शास्त्रविहितानि स्वस्वकर्माणि कर्तृत्वाभिमान-फलाभिसन्धित्यागपूर्वकमाचरन्तश्च श्रीभगवदनुग्रहात् अभ्युदयनिःश्रेयसपरम्पराः अवाप्नुयुरित्याशास्महे।

श्रीकाञ्चीक्षेत्रम्
अनलाऽऽश्विन शुद्ध द्वादशी
४-१०-१९७६

नारायणस्मृतिः

# ஸ்ரீ முகம்

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீமத் சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி ஸ்ரீ பாதர்களில் ஆதேசத்தை அனுஸரித்து, ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீமத் ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்ரீ பாதர்களால் நாராயண ஸ்மிருதி செய்யப்படுகிறது.

உன் சிஷ்யன் தங்களை சரணாகதி பண்ணுகிற என்னை உபதேசித்து அநுக்ரக்ஷிக்க வேண்டும் என்று தன்னை குருவாக அடைக்கலம் புகுந்த அர்ஜுனனுக்கு பகவான் ஸ்ரீகிருஷ்ணனால் உபதேசிக்கப்பட்ட மூன்று ஆறு அத்யாயங்களாக, உபாதியை விளக்கிய ஜீவ ஈசுவர ஒருமையை விளக்குகிறதாயும் ஆதலாலேயே உபநிஷத் என்று யாவராலும் சொல்லப்படுகிற பகவத்கீதை பரமேசுவருடைய அவதாரமான ஸ்ரீசங்கர பகவத்பாதரால் அருளிய பாஷ்யத்துடன் நன்கு பிரகாசித்துக் கொண்டிருக்கிறது.

இந்த பகவத்கீதைக்கு சங்கர பாஷ்யத்துடன் சேர்ந்து தமிழ் பாஷை அறிந்தவர்களுக்கு நன்கு தெரியும்படி செய்வதற்கு அதிக சிரத்தையுடன் மேல்மங்கலக் கிராமத்தைச் சேர்ந்த ஸ்ரீ சுந்தரராஜர் என்று பிரஸித்தரான இல்லறத்தில் இருந்துகொண்டே இருந்தாலும் ஸந்யாஸிக்குரிய மனோநிலையைப் பெற்ற ஒருவரால் தமிழ் பாஷையில் எழுதப்பட்ட உரையானது எளியநடையில் அந்தந்த விஷயங்களை நன்கு விளக்கிக்கொண்டு தமிழ் பாஷை தெரிந்தவர்களுக்கு கீதையின் சரியான அர்த்தத்தை அறியவிரும்புகிறவர்களுக்கு பெருத்த உதவியை அளிப்பதாக இருக்கிறது. 60 வருஷங்களுக்கு முந்தி தென்பிராந்தியத்தில் உள்ளவர்களுக்கு மாத்திரம் உபயோகத்திலிருந்த கிரந்தலிபியில் அச்சிடப்பட்டு அந்த லிபி தெரிந்தவர்களிடத்தில் மாத்திரம் உபயோகப்பட்டு வந்த கிரந்தமும் தற்சமயம் கிடைக்காத நிலையாலும் யாவருக்கும் சுலபமாக பிரசாரத்தில் இருக்கவேண்டியதைக் கருதி தமிழில் மொழி பெயர்த்த மஹா புருஷருடைய பல சிஷ்யர்கள் தேவநாகரீ லிபியில் பகவத்கீதா சுலோகங்களையும் சங்கரபாஷ்யத்தின்

தமிழ் அநுவாதங்களையும் அச்சிட்டு வெளியாக்குகிற விஷயத்தை அறிந்து நாம் மிகவும் ஆனந்தப்படுகிறோம்.

தமிழ் பாஷை அறிந்த ஆஸ்திகர்கள் இந்த உத்தம கிரந்தத்தை கையாண்டு பகவத்கீதையின் நிஜமான அர்த்தத்தை நன்கு அறிந்து கொண்டு பகவானின் உபதேச வாக்யத்தின்படி அவரவர்களுக்குச் சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட கர்மாக்களை பலத்தில் அபேக்ஷை இல்லாமலும் நாம் செய்தோம் என்ற அபிமானமும் இல்லாமல் செய்து கொண்டு பகவத் அநுக்ரஹத்தால் மோக்ஷபர்யந்தமான சிரேயஸ்ஸை அடையவேண்டும் என்று அநுக்ரஹிக்கிறோம்.

*நாராயண ஸ்மிருதி:*

ஸ்ரீ காஞ்சீக்ஷேத்ரம்
அநல வர்ஷம், ஆச்வின
4.10.1976

# விஷய அட்டவணை

## உரைப்பாயிரம்



## முதல் அத்தியாயம்:
## அர்ஜுன விவாத யோகம்



## இரண்டாம் அத்தியாயம்:
## ஸாங்க்ய யோகம்

## மூன்றாம் அத்தியாயம்:
## கர்ம யோகம்

## நான்காம் அத்தியாயம்:
## ஞான யோகம்

## ஐந்தாம் அத்தியாயம்:
## ஸந்யாஸ யோகம்

## ஆறாம் அத்தியாயம்:
## த்யான யோகம்



## ஏழாம் அத்தியாயம்:
## விஜ்ஞான யோகம்

## எட்டாவது அத்தியாயம்:
## அப்யாஸ யோகம்



## ஒன்பதாம் அத்தியாயம்:
## ராஜவித்யா ராஜகுஹ்ய யோகம்

## பத்தாம் அத்தியாயம்:
## விபூதி யோகம்



## பதினோராம் அத்தியாயம்:
## விச்வரூப்தர்சன யோகம்

## பன்னிரண்டாம் அத்தியாயம்:
## பக்தி யோகம்



## பதின்மூன்றாம் அத்தியாயம்:
## க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ விபாக யோகம்

## பதினான்காம் அத்தியாயம்:
## குணத்ரய விபாக யோகம்

## பதினைந்தாம் அத்தியாயம்:
## புருஷோத்தம யோகம்



## பதினாறாம் அத்தியாயம்:
## தைவாஸுர ஸம்பத் விபாக யோகம்

## பதினேழாம் அத்தியாயம்: ச்ரத்தாத்ரய விபாக யோகம்



## பதினெட்டாம் அத்தியாயம்: மோக்ஷ ஸந்யாஸ யோகம்

ॐ

नमो भगवते वासुदेवाय

# ॥ श्रीमद्भगवद्गीता ॥

## श्रीशङ्करभगवत्पूज्यपादाचार्य - विरचितेन भाष्येण सहिता

ॐ नारायणः परोऽव्यक्तात् अण्डमव्यक्तसंभवम् ।
अण्डस्यान्तस्त्विमे लोकाः सप्तद्वीपा च मेदिनी ॥

நாராயண: பரோऽவ்யக்தாத் அண்டமவ்யக்தஸம்பவம் ।
அண்டஸ்யாந்தஸ்த்விமே லோகா: ஸப்தத்வீபா ச மேதினீ ॥

# ஸ்ரீமத் பகவத் கீதையும்

## ஸ்ரீசங்கர பகவத்பாத ஆசார்யர் அருளிச்செய்த பாஷ்யமும்

### உரைப்பாயிரம்

### கடவுள் வாழ்த்து

ஓம் *"நாராயணன் (என்னும் பரம்பொருளானது) அவ்யக்தத்திற்கு அப்பால் உள்ளது. அண்டம் அவ்யக்தத்தினின்று உண்டாவது : அண்டத்துளன்றோ இந்த உலகங்களும் ஏழு தீவுள்ள பூமியும் உள்ளன."*[1]

*[அவ்யக்தம் - மாயை.]*

1. *இந்த சுலோகம் ப்ரஹ்மாண்ட புராணத்திலிருப்பதாக ராகவானந்தர் மனுஸ்மிருதியின் 1-ஆம் அத்தியாயத்து 10-ஆம் சுலோகத்தினுரையிற் கூறியுள்ளார். இன்னும் இது, மனுஸ்மிருதியின் சில பிரதிகளில், 1-ஆம் அத்தியாயத்து, 11-ஆம் சுலோகமாகவும் காணப்படுகின்றது.*

## வேதத்திற் கூறிய இருவகைத்தான தருமம்

அந்த பகவான் இந்த உலகத்தைப் படைத்து, அதனை நிலைபெறச் செய்ய விரும்பியவராய், முதலில் மரீசி முதலிய பிரஜாபதிகளைச் சிருஷ்டித்து, வேதத்திற் கூறிய பிர-விருத்தி என்னும் தருமத்தைக் கைக்கொள்ளச் செய்தனர்; பின்பு ஸனகர் ஸனந்தனர்[2] முதலிய மற்றையோரையும் படைத்து, ஞான வைராக்கியங்களைக் குறிப்பாகப் பெற்ற நிவிருத்தி என்னும் தருமத்தைக் கைக்கொள்ளப் பண்ணினர். வேதத்திற் கூறிய பிரவிருத்தி என்னும் இரு வகைத்தான தருமமே உலகத்தை (ஒழுங்குபட) நிலைபெறச் செய்வது. பிராணிகளுக்குச் செல்வத்தையும் உறுதியான நன்மையையும் நேரே தருவதான அத்தருமமே (தம்தமக்கு) நன்மையைத் தேடிக் கொள்ளும் பிராமணர் முதலிய வர்ணத்தாராலும் ஆச்ரமத்தாராலும் நெடுங்காலமாக[3] அநுஷ்டிக்கப்பட்டு வருகின்றது.

## பகவதவதாரத்தின் பிரயோஜனம்

(அங்ஙனம்) அநுஷ்டிப்பவருடைய காமக்கிளர்ச்சியால் (நிலையின்றி) விவேகபுத்தி தேய, அதனால் அதர்மம் விளைய, அவ்வதர்மத்தால் தருமம் கீழே யமர்த்தப்பட்டும், அதர்மம் மேலிட்டும் வருமளவில், (வரைமுறையில்லாமல் வரம்-பழிந்து போகாவண்ணம்) ஜகத்தின் நிலையைப் பாதுகாக்கக் கருதிய அவ்வாதிகர்த்தாவான நாராயணனென்னும் திருநாமமுடைய விஷ்ணுவானவர், "பூலோகத்திற்குரிய ப்ரஹ்ம',[4] மாகிய பிராம்ஹண்யத்தைக் காத்தற்பொருட்டு

---

2. "அவர்கள் வைராக்கியத்தை அடைந்து மோக்ஷமார்க்க நிரந்தர்களாய் ப்ரஜா சிருஷ்டியில் பிரவிருத்தியாமல் ஸர்வ ஸங்க பரித்யாகிகளாய் யோக நிஷ்டை பெற்று, காமக் குரோத மத மாச்சரியங்களில்லாதவர்களாய், நிருதார்த்தராயிருந்தார்கள்" (2-1-7-). இதற்கு இணங்க ஸனத் குமாரர் [எப்பொழுதுஞ் சிறுவர்]' என்ற பெயரினையுங்காண்க.

3. '' दीर्घेण कालेन என்பதை अनुष्ठातृणाम् என்பதோடுங் கூட்டி, அவற்றுள் மூந்தினது "வெகு காலமான பின், அதாவது கிருதயுகமும் திரேதாயுகமும் முடிந்து, துவாபரயுகமும் முடிவுபெறுமளவிலே" என உரைப்பர். (ஆ).

यं देवं देवकी देवी वसुदेवादजीजनत् । भौमस्य ब्रह्मणो गुप्त्यै . . . . . ॥

4. "தேவகிப் பிராட்டியாரானவர் பூலோகத்திற்குரிய ப்ரஹ்மத்தைக் காத்தற்காக வஸுதேவர்க்கு எந்தக் கடவுளைப் பெற்றாரோ..........." ம-சா-7). பூலோகத்திற்குரிய ப்ரஹ்மமாவது – வேதங்களும், பிராமணர்களும், யாகங்களுமாம்" என உரையாசிரியர் நீலகண்டர் இங்கு இச்சுலோகத்தினுரையிற் கூறியிருத்தலை இங்கு அறிக.

வஸுதேவருக்குத் தேவகியாரிடத்து (ஸ்ரீமத்) கிருஷ்ண (பகவா)னாக அம்சத்தால்[5] அவதரித்தனரென்ப. ஏனெனில், பிராம்ஹண்யம் பாதுகாக்கப் படுமாயின். வைதிகதரும மானது பாதுகாக்கப்பட்டதாகும்; வர்ணாச்ரம பேதங்கள் அதனைச் சார்ந்துநிற்றலின்.[6]

[வைதிகம்-வேதத்தில் விதித்தது.]

ஞானம், ஐச்வர்யம், சக்தி, பலம், வீர்யம், தேஜஸ் என்ப வற்றை எப்பொழுதுமுடைய அந்த பகவானானவர், முக்குண வடிவமும் விஷ்ணுவிற்கு உரியதுமான தம் மாயை[7] யாகிய மூலப்பிரகிருதியை வசப்படுத்திக் கொண்டு—(உண்மையில்) பிறவாதவராய், அழிவற்றவராய், பிராணி களுக்கு ஈச்வரராய், இயல்பாகவே நித்யராய் சுத்தராய் புத்தராய் முக்தராயிருப்பினும்—தம் மாயையினாலே உடம் பொடு நிற்பவர்போலவும் பிறந்தவர்போலவும், லோகா நுக்கிரகஞ்செய்பவராய் (உலகத்தில்) காணப்படுகிறார்.

[புத்தர்-ஜடத்தன்மையற்றவர், ஞானவடிவானவர்]

தமக்கு ஒருபயனும் இல்லையாயினும், பிராணிகளை ஈடேற்றவேண்டுமென்னும் எண்ணத்தால் வேதத்தில் விதித்துள்ள தருமமிரண்டையும் சோகமோகப் பெருங் கடலில் மூழ்கிக்கிடக்கின்ற அர்ஜுனனுக்கு—நற்குணம் மிகுந்தவரால் ஏற்றுக் கொள்ளப்பட்டும், அநுஷ்டிக்கப் பட்டும் வருவதான தருமம் பரவுதலையடையுமென்று (கருதி) உபதேசித்தருளினார்.

---

5. "அம்சத்தால்" என்பதற்கு "स्वेच्छानिर्मितेन मायामयेन दिव्येन रूपेण" "தமதிச்சைசைப்படி எடுக்கப்பட்ட மாயாமயத் திருமேனியால்" என உரைப் பர் (ஆ). பகவானுடைய திருமேனி மாயையினாலாகியதாம். அது மனித சரீரம் போலப் பஞ்ச பூதங்களாலாகியது மன்று; உண்மையுமன்று; அதாவது அங்கே தான் உள்ளது இங்கே தான் உள்ளது என வரையறுக்கப்படாது எங்கும் பரிபூரணமாகி நிற்கும் பரமானந்தப் பரம்பொருளே லோகாநுக் கிரகஞ் செய்தற்பொருட்டுப் பிறப்பது போலவும், உடம்பொடு நிற்பது போலவும் காணப்படுகிறதென உணர்க. கீதையின் (4–6) ஐப் பார்க்க,

6. க்ஷத்திரியர் முதலாயினோர் யாகஞ்செய்தலிலும், வேதமோதுதலிலும் பிராமணர்களுடைய உதவியை வேண்டி நிற்கிறார்கள்.— ஆ

7. "தம்", "மாயை", என்ற இவ்விரண்டனுள் முந்தியது 'பிரகிருதி பகவா னுக்கு உட்பட்டது' என்றும், பிந்தியது 'பிரகிருதியின் வடிவம் தோற்ற மாத்திரமேயன்றி மெய்ப்பொருளன்று' என்றும் "வசப்படுத்திக் கொண்டு" என்பது ஜீவன் பிரகிருதிக்கு உட்படுவது போல, பகவான் அதற்கு உட் படாதவர் என்றும் தெரிவிக்குமாறு காண்க. ஆ "பகவானை அடைக்கல மாகப் புகுந்தவர் மாயையைக்கடந்து நிற்பவர்" (7-14) என்ற இதனையும் இங்கு நோக்கிக் கொள்க. [மாயை, மாயா வடசொல். மா-இல்லை, யா-எது இல்லை யோ அது: அதாவது போலியான தோற்றம், பொய்ம்மை].

## உரைப்பாயிரம்

### கீதையும், பாஷ்யமும்

முற்றுணர்ந்தவரான வேதவ்யாஸ பகவான், கீதை என்னும் பெயருடைய எழுநூறு சுலோகங்களால் அந்த தருமத்தைப் பகவான் உபதேசித்த வண்ணம் திரட்டி அமைத்தருளினார். [வேத வியாஸர் - வேதங்களை வகுத்து ஒழுங்குபடுத்தியவர்]

பிரசித்தமான இந்த கீதா சாஸ்திரமானது ஸகல வேதார்த்த ஸாரத்திரட்டு; பொருளுணர்தற்கு அரியது. அதன் பொருளை வெளியிடுதற்காக (முன் உரையெழுதினோர்) அநேகரால் பதம், பதப்பொருள், வாக்கியப்பொருள், நியாயமென்பன விவரிக்கப் பெற்றிருந்தும், (அது, முன் பின்) முற்றும் மாறுபட்ட பல பல பொருளுள்ளதாக ஸாமான்ய ஜனங்களால் கிரகிக்கப்பட்டு வரக்கண்டு, அதன் பொருளைத் தெளிவாய் நிர்ணயித்தற் பொருட்டு யான் சுருக்கமாய் உரை செய்கிறேன்.

[நியாயம் - ஆக்ஷேப ஸமாதானம்]

### ஞானயோகமே முக்திக்கு நேரான ஸாதனம்

பிரசித்தமான இந்த கீதா சாஸ்திரத்தின் பயனாவது சுருக்கமாக(ச் சொல்லில்) ஸம்ஸாரமானது (தனது) காரண(மாகிய மூல அஜ்ஞான)த்தோடு முற்றும் ஒழிந்திடுதலாகிய (யாவற்றினும்) மேம்பட்ட உறுதியான நன்மையேயாம். அது, ஸகல கர்மங்களையும் துறத்தலை முன்னிட்டதான ஆத்மஞான நிஷ்டை என்னும் தருமத்தினின்று உண்டாகின்றது. அவ்வண்ணமே கீதையின் பொருளான இதே தருமத்தைக் குறிப்பிட்டு "ப்ரஹ்மத்தின் நிலையைப் பெறுதற்கு அந்தத் தருமமே நன்றாகப் போதும்" (ம-அச்வ-16-12) என அநுகீதைகளில் பகவானே கூறினர். இன்னும், அங்கு "எவன் ஒன்றில் நிற்றலிலே ஊன்றி அமர்ந்தவனாய், ஒன்றும் நினையாதவனாய்ச் சும்மாவிருக்கின்றானோ அவனுக்குப் புண்ணியமுமில்லை, பாபமுமில்லை; வாழ்வுமில்லை, தாழ்வுமில்லை." "ஞானத்திற்குத் துறவே அடையாளம்" (ம-அச்வ-43-26) என்றும் கூறியுள்ளார். இங்கேயும் இறுதியில் "ஸகல தரும (அதரும)ங்களையும் விட்டொழிந்து என்னையே தஞ்சமாகக் கொள்" (18-66) என்று அர்ஜுனனுக்கு அருளிச் செய்தனர். [ஒன்றில் நிற்றலிலே ஊன்றி அமர்ந்தவன்-ப்ரஹ்மத்திலே லயித்தவன்]

## கர்மயோகமானது முக்திக்கு ஸாதனமாயிருக்கும் விதம்

*பிரவ்ருத்தி என்னும் தருமமானது, செல்வத்திற்குப் பயன்படுவதாயினும், வர்ணங்களையும் ஆச்ரமங்களையும் உத்தேசித்து விதிக்கப்பட்டதாம். அது, (பயனை எதிர் நோக்கிச் செய்யப்பட்ட பொழுது) தேவர் முதலாயினோர்களின் நிலையைப் பெறுதற்கு ஏதுவாயிருப்பினும், பயனை எதிர் நோக்காது ஈச்வரார்ப்பணபுத்தியோடு செய்யப்பட்ட சித்தசுத்தி வரப்பண்ணுவதாம். இனிப் பரிசுத்தமான மனம் ஞான நிஷ்டைக்கு ஏற்ற தகுதிபெற, அவ்வழியாக (ப் பிரவிருத்தி தருமமானது) ஞானமுண்டாகச் செய்தலால் (இவ்வாறு) முக்திக்கு (ப் பரம்பரையான) காரணமாதலையும் பெறுகின்றது. அவ்வண்ணமே (இதே கருத்தை உட்கொண்டு) "ப்ரஹ்மத்தினிடத்துக் கர்மங்களை அர்ப்பித்து" "............யோகிகள் பற்றைவிட்டுக் கர்மத்தைச் செய்கிறார்கள், சித்தசுத்திக்காக', (5.10-11) என (ஸ்ரீ பகவான்) கூறுவார்.*

## கீதாசாஸ்திரத்தின் சிறப்புப்பொருளும், சிறப்புப்பயனும்

*கீதா சாஸ்திரமானது, முக்திக்குப் பயன் படுவதான இவ்விருவகை தருமத்தையும் (பொதுவாய்) வெளிப் படுத்தி, (தான்) சொல்ல எடுத்துக் கொண்ட (விஷயமான ப்ரஹ்மமாகிய வாஸுதேவ னென்ற பரமார்த்த தத்துவத்தைச் சிறப்பாய் வெளிப்படுத்துகின்றது; (எனவே,) சிறப்புப் பயனும், சிறப்புச் சம்பந்தமும், சிறப்புப் பொருளும்[8] உடையது (என்பதாயிற்று). அதன் பொருளைக் கண்டு தேறியவளவிலே ஸகல புருஷார்த்தங்களும் கைகூடு மாதலால், யான் அதற்கு உரையெழுத முயற்சி செய்கின்றேன்.*

---

8. ஒரு நூல் கேட்கப்புகுந்தவர்க்கு அந்நூலாற் கூறப்படும் பொருளும், நூல் கேட்டலாற் பெறப்படும் பயனும் கேட்பதற்கு உரிய அதிகாரிகளாவர் இவரென்பதும், நூற்கும் நூல் கூறிய பொருளுக்குமேயன்றி நூல் கூறிய பொருளுக்கும் பயனுக்கும் ஸம்பந்தமும் உணர்ந்தாலன்றி நூல் கேட்பதில் மன வூக்கம் செல்லாமையின், இந்நான்கையும் உணரவேண்டும்; ஆகவே, அவை இங்கு வருமாறு:—நூலாற் கூறப்படும் பொருள்-பரப்ரஹ்மம்: நூல் கேட்டலாற் பெறப்படும் பயன் - முக்தி: கேட்பதற்கு உரிய அதிகாரிகளாவார் - அர்ஜுனன் போன்றவர்: நூற்கும் நூல் கூறிய பொருளுக்கும், உணர்த்துவதும் உணர்த்தப்படுவதுமாகிய ஸம்பந்தம்: நூல் கூறின பொருளுங்கும் பயனுக்கும், ஸாதனமும் ஸாத்தியமுமாகிய ஸம்பந்தம்; இவற்றை முறையே விஷயம், பிரயோஜனம், அதிகாரி, ஸம்பந்தம் என்னும் அநுபந்தசதுஷ்டயம் என்பார் வடநூலார். [ஸாதனம்–கருவி. ஸாத்தியம்–கருவியால் ஸாதிக்கப் படுவது.]

